9th December 1961]

வேண்டாமென்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது. ஆகவே, மீண்டும் சொல்கிறேன். தனி நபர்கள் யாராவது முன்வந்தால், வேண்டிய உதவி செய்யப்படும்.

SRI A. GOVINDASAMY : சந்தன சோப் உற்பத்தி ஆலை ஏற்படுத்துவதற்கு சர்க்கார் முயற்சி எடுக்குமா என்று நான் கேள்வி கேட்ட நேரத்தில் யாரையாவது நாலு பேரை அழைத்துக் கொண்டு வாருங்கள் என்று கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொன்னார்கள். அப்படியானால் சர்க்காருக்கு அத்தகைய எண்ணம் கிடையாதா என்று கேட்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சர்க்கார்தான் எதையும் செய்ய வேண்டுமென்பதில்லை. கனம் அங்கத்தினர்களுக்கும் இதிலே அக்கறை இருக்க வேண்டும். அதிலும் குறை கூறக்கூடிய அங்கத்தினர்களுக்கு இதிலே முக்கியமான பொறுப்பு இருக்க வேண்டுமென்பதற்காக, அவர்களும் இதிலே கவனம் செலுத்த வேண்டுமென்பதற்காக நான் சொன்னேன்.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், கேரள சாண்டல் உட் சோப் என்றும், மைசூர் சாண்டல் உட் சோப் என்றும் கேரளாவிலிருந்தும், மைசூரிலிருந்தும் தயாரிக்கப்படுகிறது. அதேபோல், நம் சர்க்காரும் தமிழ்நாடு சாண்டல் உட் சோப் என்று ஒரு தொழிற்சாலையை ஏற்று நடத்துவதற்கு முயற்சி செய்யக் கூடாதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எத்தனையோ புதிய அமைப்புகள் இப்போது இருந்து வருகின்றன. இந்த சோப் தொழிற்சாலை என்பது ஒரு பழமையான தொழில். ஆகவே, இதை யார் வேண்டுமானாலும் ஏற்று நடத்தலாம். சர்க்கார்தான் ஏற்று நடத்த வேண்டுமென்பதில்லை. சர்க்கார் ஏற்று நடத்த வேண்டியதை, நடத்திக்கொண்டுவருகிறது.

*Food gift by the United States of America*

*2205 Q.—SRI M. KALYANASUNDARAM : } Will the Hon.
SRI A. A. RASHEED : }
the Minister for Finance be pleased to state—

(a) the details of food gift offered by the United States of America for school children in Madras State; and

(b) when the supply is expected to commence ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) The CARE organisation has offered to supply 18.75 million pounds of rice, 6.25 million pounds of milk powder, 3 million pounds of corn meal and 3 million pounds of vegetable cooking oil, worth about Rs. 3 crores.

(b) A shipment of 4·3 million pounds of milk powder has arrived in August 1961. The other commodities are expected to arrive during this and subsequent months.

[19th December 1961

**SRI A. GOVINDASAMY :** குழந்தைகளுக்கென நன்கொடையாக வந்த பால் துர்விநியோகம் செய்யப்பட்டு, அந்த முறையிலே யாராவது கண்டுபிடிக்கப்பட்டு, அத்தகைய தவறு செய்தவர்கள் தண்டிக்கப்பட்டு இருக்கிறார்களா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இதுவரைக்கும் நல்லவேளையாக யாராலும் அத்தகைய தவறுகள் ஏற்படவில்லை.

SRI A. A. RASHEED : Sir, may I know whether it is a gift from the people of the United States or from the Government of the United States? Are any cash grants received from the Government of the United States?

THE HON SRI C. SUBRAMANIAM : No cash grant is received. This aid is routed through CARE Organisation of America.

SRI K. VINAYAKAM : In the event of the success of the scheme, would our Government take steps to extend this for the next year also?

THE HON. SRI C. SUBRAMANIAM : It is bound to be extended not only for the next year but for many more years.

*Adulteration of oil*

*** 2206 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN :** கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) உணவு கலப்படத்தடுப்புச் சட்டத்தின்படி எண்ணெயில் எத்தனை சத விகிதம் கொழுப்புச் சத்து அமிலமிருந்தால் தண்டிக்கப்படுகிறது ;

(இ) 1959-60-ல் நமது ராஜ்யத்தில் எத்தனை எண்ணெய் வியாபாரிகளுக்கு அபராதம் அல்லது தண்டனை விதிக்கப்பட்டுள்ளது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ( ) Free fatty acid in edible oils should not be more than 3 per cent.

(இ) A statement [a] is placed on the table of the House.

**SRI V. K. KOTHANDARAMAN :** இந்த ஸ்டேட்மெண்டில் 305 பேர்களில் 184 பேர்களுக்குத் தான் தண்டனை கொடுக்கப்பட்டதாக சொல்லப்பட்டிருக்கிறது. தண்டனை என்று சொன்னால், அபராதம் விதிக்கப்பட்டதா அல்லது கடின காவல் தண்டனை விதிக்கப்பட்டதா ? எந்தமாதிரி தண்டனை விதிக்கப்பட்டது ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** தண்டனையில் அபராதமும் உண்டு, சிறை தண்டனையும் உண்டு. ஆனால், இப்பொழுது என்னிடம் அது பற்றி விவரம் இல்லை, 'ப்ரேக்-அப்' இல்லை.

[a] Printed as Appendix I on page 290 infra.